தாலும், ரயில் நிலையங்களில் தாங்க முடியாத கூட்டம் இருக்கின்றன. அதனால் இங்கிருந்து நேர் முகமாக தனுஷ்கோடிக்கு போக இந்த மார்க்கம் ரொம்பவும் சமீபமாய் குறுக்கே இருக்கிறது. அதனால் ரொம்ப மைல்களும் குறைவாக ஆகிறது. அதனால் இந்த லைனில் காரைக்குடி வரையில் பல நேர் வண்டிகளை விடுவதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் கேள்வி நேரத்தில் கேள்வி கேட்க வேண்டுமேயொழிய அபிப்பிராயத்தை தெரிவிக்கக்கூடாது. இருந்தாலும் கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்வதாக இருந்தால் பதில் சொல்லலாம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் குறிப்பிட்டபடியே மெயில் லையனில் திருச்சி வரையில் நேர் மார்க்கம் இருக்கிறது. அது வரையில் போட் மெயில் போகிறது. அதை அரந்தாங்கி வரையில் நீடிக்கவேண்டுமென்றால் நடுவில் இருக்கக்கூடியவர்களாகிய திருச்சியிலுள்ளவர்கள், மாயவரம் பகுதிகளில் உள்ளவர்கள் பாதிக்கப்படுவார்கள். இந்த மார்க்கத்தில் இரண்டு வேகமாகப் போகும் ரயில்கள் இருக்கின்றன. அதனால் அதிகப்படியாக விடுவதற்கு முடியாமல் இருக்கிறது. இது தான் நிலைமை.

*Use of fire-arms by the Police*

* 205 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government intend to revise the Police Code with regard to the use of fire-arms by the Police?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. A. RASHEED : May I know whether the Police Code allows shooting to kill or to disperse unruly crowds?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am unable to answer the question.

SRI K. SATTANATHA KARAYALAR : போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதைப்பற்றி மத்திய சர்க்கார் சமீபத்தில் எல்லா சமஸ்தானங்களும் ஒன்றுபட்டு ஒரு சட்டம் நிறைவேற்ற வேண்டுமென்று ஏதாவது எழுதி உள்ளார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி எந்த விதமான தகவலும் கொடுப்பதற்கு இல்லை.

*Religious education*

* 206 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is a proposal to have religious education as an integral part of the educational system?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI S. LAZAR : இதனுடைய தேவையைப் பற்றி நாட்டிலுள்ள பெரும் தலைவர்கள் ஸர். ராதாகிருஷ்ணன், மகாத்மாகாந்தி போன்றவர்கள் வற்புறுத்தியதன் காரணத்தால் இதைப்பற்றி பரிசீலனை செய்வதற்கு ஒரு தனி குழுவை நியமிக்க அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் மத போதனை என்று சொல்லலாம். இதைப் பற்றி பேசும் போது பல பிரச்னைகள் வருகிறது. அதை விட்டு விட்டு எல்லோருக்கும்

பொதுவாக இருக்கக்கூடிய நல்ல விஷயங்களை மாணவர்களுக்கு எடுத்துச் சொல்வதற்கு மதம் அடிப்படை இல்லை. பொதுவாக இருக்கும் சில உண்மைகளை மாணவர்களுக்குத் தெரிவிக்கும்படியான யோசனையைச் செய்யலாம்.

SRI S. NAGARAJA MONIGAR : மத விஷயமான பாடங்களை பள்ளிகளில் போதிக்க சர்க்கார் ஏற்பாடு செய்ய முடியாவிட்டாலும் மதத்திற்கு எதிராக நடக்கும் பிரசாரங்கள், போதனைகளைத் தடுக்க நடவடிக்கை எடுக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இந்தக் கேள்விக்கும் மூல கேள்விக்கும் சம்பந்தம் இல்லை. அதனால் வேறு கேள்வி போட வேண்டும்.

*Guineaworm disease*

* 207 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the places where Guineaworm disease is prevalent; and

(*b*) the steps taken to eradicate this disease?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A paper* is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : இதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து கழிந்த ஆண்டு நமக்குக் கொடுக்கப்பட்டிருந்த உதவிப் பணம் முழுவதும் உபயோகப்படுத்தப்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : I am not aware of any such help.

SRI M. K. SOMASUNDARAM : இம்மாதிரியான வியாதி திருநெல்வேலி பகுதிகளில் இருக்கிறது. அந்த வியாதியைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : திருநெல்வேலி ஜில்லாவில் இல்லை. ஏதோ எங்கேயோ ஒரு பகுதியில் ஒன்றிரண்டு இடங்களில் இருக்கிறது. புள்ளி விவரங்கள் கொடுக்கும்படியான அளவில் அங்கே இல்லை.

SRI S. RAMALINGA PADAYACHI : இம்மாதிரியான வியாதி வருவதற்கு குடி தண்ணீர்தான் காரணமாக இருக்கிறது. குட்டை குளங்களில் தண்ணீர் குடிப்பதினால் நல்ல குடி தண்ணீர் இல்லாத காரணத்தால் இது வருகிறது. இதைப்பற்றி பரிசீலனை செய்து இதைச் தேசியப் பிரச்சினையாகக்கருதி பார்த்தால் தெரியும். ஆகவே பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் அமைக்கும் திட்டத்தைக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நோயை தீர்த்துகட்ட வேண்டும் என்பதற்காகத்தான் ஒரு திட்டம் போட்டு சுமார் இரண்டு அல்லது மூன்று லட்சம் ரூபாய் செலவு செய்து இந்த நோய் இப்பொழுது இருக்கும் இடங்களிலிருந்து குறைக்க வேண்டும் என்பதற்காக அதைப் பற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

SRI M. K. SOMASUNDARAM : திருநெல்வேலி ஜில்லாவுடன் மற்றும் எவ்வளவோ இடங்களில் இந்த வியாதி அதிகமாக இருந்து கொண்டு இருக்கிறது. இது வராமல் தடுக்க அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்து என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

MR. SPEAKER : நீங்கள் சொல்லும் இடங்கள் இந்தக்கேள்வியில் இல்லை. கேள்வி பொதுவாகத்தான் இருக்கிறது.

* Printed as Appendix II on page 147 infra.